மல் வேறு மொழியில் எழுதப்படும் என்பது அறிவுடையார் நகையாடற் பாலதே யாகுமென்றும், தமிழ்மொழி ஒரு காலத்தில் வளம்பெருகியும், இடையிற் குறைந்தும் இப்போது மீண்டும் பெருகத் தோன்றியும் வருவதே ''என்றுமுளதென்றமிழ்' என்பதை உறுதிப்படுத்துகின்றதென்றும், இன்னும் வேறு சில அரிய பொருள்களும் பேசிப் பசுமரத்தாணிபோல் பதியச் செய்து எல்லாரையும் மகழுமாறு செய்தார்கள்.

இவ்வாறு ஒவ்வொரு தமிழ்த்திங்கள் கடைசி ஞாயிறன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெறுமென்றும், அன்பர்களனைவரும் அவ்வமயங்களிலெல்லாம் வந்து கேட்டின்புறுதல் வேண்டுமென்றும் காரியாளர் வ. சுப்பையாபிள்ளை யவர்கள் தெரிவித்ததும் இரவு 8 - 15 - மணிக்குக் கூட்டம் கலைந்தது.

---

## சிதம்பரத்தில் விபூதி கொடுக்கும் முறை

[ஆ. சு. இராமலிங்க ஓதுவாமூர்த்தியவர்கள்.]

தென்காசிச் சிவாலயத்தில் பூஜாகாலத்தில் தேவாரம் ஓதும் சமயத்தில் பிராமணர்களுக்கு விபூதி முதலிய பிரசாதங்கள் கொடுத்த காரணத்தால் தேவாரம் ஓதமுடியாதபடி பெருங் கூக்குரலிட்டுக் கலகம் விளைத்த ஸ்மார்த்த பிராமணர்களின் கொடுஞ் செயல்களை செந்தமிழ்ச் செல்வி என்னும் பத்திரிகையின் வாயிலாக உணர்ந்து இச்சிறு கட்டுரை எழுதத் தொடங்கினேன்.

உலகிலுள்ள ஆலயங்களுள் சிவாலயங்களே சிறந்தன. சிவாலயங்களுள் தேவாரப்பாடல் பெற்ற திருத்தலங்களே சிறந்தன. (அவை ரிஜிஸ்டர் செய்த பத்திரங்களே போல்வன) அவைகளுள் பஞ்சபூத தலங்களே சிறந்தன. பூதங்களுட் சிறந்தது ஆகாயம் அந்த ஆகாய தலமே சிதம்பரதலம். இம்மட்டோ, கோயில் என்ற பொதுப் பெயரானே அறியப்படுந் தலம் சிதம்பரம். பாடல்பெற்ற திருத்தலங்களுக்கெல்லாம் முதலாவதாக வைத்து ஸ்தலமுறையில் எண்ணப்படும் தலம். பஞ்சகிருத்தியங் காட்டும் பரமர்பதி பொன்னம்பலத்தில் இறைவன் தன் மூவுருவங் காட்

டும் மூவாமுது நகரம். "புவலோக நெறிபடைத்த புண்ணியங்கள் நண்ணிய சீர்ச் சிவலோகமாவதுந் தில்லைச் சிற்றம்பலம்" என்னும் இன்னோரன்ன அளவிலாச் சிறப்புவாய்ந்த தலம் சிதம்பரம், தில்லை வட்டந்திசை கைதொழுவார்வினை, யொல்லைவட்டங் கடந் தோடுத லுண்மையேயென, ஆளுடைய அரசர் பெருமான் கூறி அருளுவரேயானால் அத்தலத்தின் பெருமையை யார் அளவிடற் குரியார் ?

இனி அந்தணர்களுட் சிறந்தார் தில்லைவாழந்தணர்களே யாவார். யாங்ஙனமெனின் ஸ்ரீ நடராசப் பெருமானே "நாமி வரிலொருவர்" என்று அருளின பெருமை பெற்றார். அறு பத்து மூன்று நாயன்மார்களுள் முதலடியவராக வைத்தெண்ண வேண்டித் திருவாரூர்த் தியாகராஜப் பெருமான் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு அடி எடுத்துக் கொடுக்கு முன்னிலையில் "தில்லை வாழந்தணர்" என்றருளிய வகையிலும் சிறந்தா ராவர். இனிப் பெரும்பேறுடையோன் தில்லாராய் திருவுடைத் தில்லை வாழந்தணர்கள் பெருமையை யார் அளவிட வல்லார்?

இனிச் சிவாலயங்களுட் சிறந்த சிதம்பரத்தில் அந்தணர்க ளுட் சிறந்த தில்லைவாழந்தணர் மூவாயிரவர் விபூதிப் பிரசாதத்தை எப்பொழுது வழங்குகிறார்கள் எனின், "தேவாரம் ஓதிய பின் னரே. அம் முறையாவது நடனப் பெருமானுக்கு நாடோறும் சாயங்கால பூஜா காலத்தில் சிற்சபைக்கு எதிரில் விளங்கும் கனக சபையில் பஞ்சாக்ஷரப்படிக்குச் சோடசோபசாரஞ் செய்வார் கள். செய்ததும் வேதமுதலிய ஓதி முன் பூஜை முறை தீக்ஷித ரவர்கள் நின்று புஷ்பாஞ்சலி பஞ்சாக்ஷரப்படி ஏறி சிற்சபைக் குட் சென்று குஞ்சிதபதத்திலருச்சித்து நின்று கட்டியங் கூறு பவர் கூறியபடியே தேவார திருவாசகம் முதலிய ஓதியதும் பெரிய கர்ப்பூர ஆராதனை செய்து காட்டிப் பின் இரகசிய தெரி சனம் மும்முறைகாட்டிப் பூஜை முடிந்ததும் விபூதியை மடவி னின்றும் எடுத்து முறைப்படி பிராமணர் முதலியோர்களுக்கு வழங்குகிறார்கள். இவ்வழக்கம் இன்று தொடங்கியதன்று. ஆல யமுந் தேவாரமும் தோன்றிய காலத்திலுள்ள பழக்கம் என்று அறியக் கிடக்கின்றதோர் தக்க காட்சிப் பிரமாணம்.

இனி தேவாரம் ஓதி முடிந்தாற்றான் பூஜை முடிகிறது. இன்றேல் குறையுடைப் பூஜையாம். தேவாரம் ஓதுதற்கு முன் பூஜை நடுவில் விபூதியை யளித்தாலும் பெற்றாலும் எவ்வளவு பெருங் கொடும்பாவம்? ('பூஜை முடியுமுன் நிவேதனத்தை நுகர்தலோ டொத்த பெரும் பாதகமாம்') இன்னும் பாண்டி நாட்டு ஆலயங் களில் யார் பழக்கிய பழக்கமோ அறியோம். மந்திர புஷ்பமானதும் ஒரு கர்ப்பூரங் காட்டும் வழக்கம். அதுவே இப் பிளவையுங் கலகத்தையும் உண்டுபண்ணியதெனத் தெரிகிறது. அந்த இடைக் கர்ப்பூரம் இங்கே காட்டப்படவில்லை. ஆதலின் தேவாரம் ஓதிய பின்னர் ஒரே படியாக இறுதியில் கர்ப்பூராராதனை செய்தலே தகுதியென இங்குள்ள சில அறிஞர் கருத்து. இவ்விஷயத் தைக் கோயிலதிகாரிகள் தெரிந்து செய்வித்தால் நலமாகும். தென்காசி அப் பிராமணர்களும் மேலே குறித்தபடி சிரேஷ்ட ஸ்தலத்தில் சிரேஷ்ட அர்ச்சகர்களால் சிரேஷ்டவிதிப்படி செய்து வரும் பழக்க வழக்க அநுட்டானத்தைக் கடைப்பிடித்து அறிந்து அடங்கித் தேவாரம் ஓதிய பிறகு விபூதிப் பிரசாதம் பெற்றுப் பேணி யணிந்து சிவபுண்ணியம் பெருஞ் செல்வத்தைப் பெற்று இனிது வாழ்வார்களென எண்ணுகின்றோம்.

இன்றேல் அப் பிராமணர்கள் முன்பு விபூதி மடலைப் பிடுங்கி யெறிந்து மகதைஸ்வரியமான திருவெண்ணீற்றைச் சிவ சந்நிதானத்தில் சிதறிப் பிராயச்சித்தம் இல்லாத சிவாபராதத்தைச் செய்ததும் கருணாநிதிக் கடவுள் ஆன்மாக்களுக் கருள்புரியுமாறு வீதிவலம் வரும்போது நாஸ்திகரோ டொப்ப வீட்டுக் கதவுகளை அடைத்தலும் இவைபோல்வன இன்னும் அளவிலாச் சிவா பராதங்களைச் செய்து செய்து அவைகளாலாம் பயன்களை எய்தட்டும் காம் என் செய்வது. இறைவன் அவர்களுக்கு மனதிலுண்டாம் மயல் தீர்த்தருள் புரிவாராக.

---

## ஓர் ஐய வினா

நுண்ணிய பல தமிழ் நூல்கள் கற்றறிந்த நாவலரும் போற்றுதலுடையீர், இச் சிறியேன் மாட்டுத் தோன்றிய ஓர்

ஐயத்தை, இச் 'செல்வி'யின் வழியாகத் தீர்ப்பிரொன்று கேட்டுக் கொள்ளுகிறேன். அது:

பாண்டி வளநாட்டில் பாய்கின்ற ஆறு சில நூல்களில் 'வையை' எனவும், சில நூல்களில் 'வைகை' எனவும் வழங்கப் பெறுவதே. தமிழாராய்ச்சி மிகப் பெரிதும் பரவி வந்துகொண் டிருக்கிற இக் காலத்தும் இவ் வோராற்றின் பேர் இருவகை ஆட்சிகளாக வழங்கப் பெறின் அதன் உண்மை விளங்காமலும் எவ்வாட்சி குற்ற மில்லது, எவ்வாட்சி குற்றமுள்ள தென்றும் என்போலியர்க்குத் தோன்றுமலு மொழிகின்றது.

ஆகலின், அதன் சரியான ஆட்சி இஃதென அன்பு கூர்ந்து வெளியிடுமாறு வேண்டுகிறேன். ஓர் கல்லூரிச் சிறுவன்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்
ஆதரவில் நடைபெறும்,

## தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்

## 5, 6-ஆண்டுகளின் நிறைவு விழா அழைப்பு.

இச்சங்கத்தின் ஐந்து ஆறு ஆண்டுகளின் நிறைவு விழா திருவருளால் நிகழும் மெய்கண்டான் யாண்டு 704 தைத் திங்கள் 9, 10-ம் நாட்களில் (1927-ம் ஜனவரி 22, 23-உ களில்) இந்நகர் தெப்பக் குளத்தெரு, தாயம்மையம்மாள் பெண்கல்விச் சாலையில் அமைக்கப் பெறும் கொட்டகையில் நடைபெறுவதாகும்.

அப்போது, கொரடாச்சேரி 'சித்தாந்த நிலையம்' பஞ்சாட்சரபுரம், ஸ்ரீலஸ்ரீ வாலையானந்த சுவாமிகள் தலைமை வகிக்க இணங்கியுள்ளார்கள். இவ்விரு நாட்களிலும் சமயம், ஒழுக்கம், தமிழ் மொழி இவைகளின் பெருமைகளைப்பற்றி அறிவாளர் பலர்சொற்பொழிவுகள் செய்வார்கள்.

திருமுறை, திருக்குறள், சமய பாடங்களின் பரீட்சையில் தேர்ச்சி பெற்ற மாணவர்கட்குப் பரிசும், தகுதிச் சீட்டும் வழங்கபெறும்.

தாங்கள் தங்கள் நண்பர் குழாங்களுடன் வந்திருந்து சொற்பொழிவுகளைச் செவி மடுத்து இன்புற்றுய்ய வேண்டுகிறோம்.

M. V. நெல்லையப்ப பிள்ளை, B.A., தலைவர்.

V. திருவரங்கம் பிள்ளை }
D. கணபதியப்ப பிள்ளை } அமைச்சர்கள்.

---

Printed by Sivakami Vilasam Press: Published by V. Subbiah. for The S. I. S. S. W. P. Society, Ltd. Madras

